## 27

# வெட்கங்கெட்டவன்

ரங்கம் நிம்மதியாய் அழுது கொண்டிருந்தாள்.

வாசல் கதவு சும்மா ஒருக்களித்திருந்தது. மதிய வேளையின் வெய்யில் மணி நாலு ஆகியும் ஜன்னல் வழியே உள்ளே பாட்டம் போட்டு வெளிச்சம் கண்ணை கூசியது. கோடை வெய்யில். ஆத்திரத்துடன் அழுது கொண்டிருந்தாள். ஒரு பழைய பாவடை அது முழுவதும் கண்ணீரால் நனைந்து சோர்ந்துவிட்டது. அழுவதற்காகத்தானே தஞ்சாவூருக்கு அம்மா வீட்டுக்கு வந்தாள்? இங்கும் வந்து விட்டான் பின்னாலே! அப்போது ரங்கத்துக்கு பதிமூணு வயசு! யார் கேட்டார்கள் கல்யாணம் வேணுமென்று. அவசர அவசரமாய் கல்யாணம் ஆகி மூணு வருஷத்தில் நாலு பிரசவம்! கையில் இருப்பது ஒரே பெண் குழந்தை. அழுகை பொங்கியது அவளுக்கு. அங்கே நிம்மதியா அழக்கூட விடமாட்டான் காத்தையன். கும்மாணம் காலேஜ் வாத்தியார்! ரொம்ப படிச்சிருந்தான்னு சாத்தையனுக்கு கட்டிவெச்சாங்க! வாத்தியாரல்ல! அடிக்கிறதே தொழில்! ம்ன்னா அடி! திரும்பினா அடி! குனிஞ்சா அடி! அப்பப்பா! இதே வேலை.

கல்யாணம் ஆன புதுசுல அதும் நல்லாத்தான் இருந்திச்சு! அடிச்சு அடிச்சு ஒடம்பே இப்ப கன்னிப்போயி மரத்துகூட போயிச்சுபோ........

"அதென்ன அடிக்கிறது" ன்னு ஆயிரம் தடவெ கத்தியாச்சு.,

அம்மா அப்பா, மச்சினன், மச்சினி எல்லாம் கூட சொல்லியாச்சு!

ரங்கமே கூட நாலஞ்சு தடவை ஓடியாந்தாச்சு. விட மாட்டான் காத்தைய்யன்.

இப்ப சொல்லாமலே ஓடி வந்திருக்கா. இப்புமும் பின்னாலியே வந்து அவ அம்மா - மாமியார் கண்ணெதுக்கவே பளீர் பளீரென்று ..... ஆத்திரம் தீர! யாரும் தடுக்கலை...அடி.

ரங்கம் கண்களைப் பிழிந்து பிழிந்து அழுதாள்.

இனி போப்போறதில்லை இவனோட..... துப்புகெட்ட..... (மனுஷனா அவன்?..... தா..... தாவணி போட்டு, ஜட பில்லை வெச்சு, குஞ்சம் வெச்சு பின்னி, நீராட்டி.... பட்டுகட்டி.... சமஞ்ச பொண்ணா அலுங்காம நலுங்காம, பதினாறு நாளும் நெய்யும் பலகாரமுமாய்.... வீட்டுக்குள்ள ஆண்வாடையே இல்லாம, காலையிலேயே நல்லெண்ணையும் உளுந்தங்களியும் நத்தையும் இருப்பு மாகு எல்லாம் பூக்க. புதுசு புதுசா இலை மாதிரி நாளுக்கு ஒரு பின்னல் வேளைக்கொரு அலங்காரம்.... ராத்திரியெல்லாம் புதுவலியோட அம்மா....அம்மா மத்த பொண்ணுங்க மாதிரியா பெருசானா ரங்கம்? இல்லியே.

ஒரே நாள்- அடுத்த பத்து நாளும் ஒதுக்கி ஒக்கார வச்சாங்க. வந்துட்டான். பொண்ணு கேக்க! ஆச்சு! ஒடனே கால்ராயரு ஊட்டு கல்யாணம் தடபுடலா ஆய்ப் போச்சு. ஒரே வாரம். ரங்கம் அழுதா போகமாட்டேன்னு. ரூமுக்குள்ளே அம்மா கழுத்த கட்டிகிட்டு அழுதா. சாரங்கபாணி கோயிலுக்குப் போறோம்னு கூட்டிகிட்டுப் போயி. காத்தையங்கிட்ட உட்டுட்டு வந்துட்டாங்க எல்லாரும். கும்மாணம் சாரங்கபாணி கோயில் அவளுக்குப் ரொம்ப பிடிக்கும். வில்லோட ராமர்! '' நாங்க தஞ்சாவூருக்குப் போறோம் ரங்கம்! சாத்தையா! பொண்ணு புதுசு! அம்மா இது ஒங்க பொண்ணு. முதல் முதல் பால் கொண்டு போயி குடுக்கணும்!'' சொல்லிக்குடுத்ததைதான் செய்தாள் ரங்கமும். பளீர்! அறை விழுந்தது. எதுக்கு அடிச்சான்னு! இப்பகூட தெரியாது. உறுமினான். அவனே போய் கதவை சாத்தி தாழ்ப்பாள் போட்டுட்டு வந்தான். பாவி! லைட்டெ அணைச்சதும் எதுவும் தெரியலை. பயம் ஏண்ணுதான் - இண்ணைக்குப் பயம்தான்! ராத்திரி மட்டும்தான் அவன் ஆம்பளை!!....குளிச்சிட்டு இருப்பான். துண்டு எடுத்துகிட்டு போற வழக்கமே கிடையாது. அலறுவான். ஓடிப்போயி துண்டெ குடுப்பாள் ரங்கம். பாத்ரூம் கதவு வழியாவே பளிச்சின்னு அறை விழும்! துண்டெ வரிஞ்சு கட்டிகிட்டே ''ஏண்டி இவ்வளவு நேரம்.... செறுக்கி.... ம்?'' கன்னத்திலும் ஒரு மிருகத்தனமான நிமிண்டல். சாயங்காலம் வரைக்கும் வலிக்கும். ஏன் கண்ணாடியில் ரெண்டு மூணு நாள் வரைக்கும் நீலம் பாரிச்சிருக்கிறது தெரியும்! அவன் விரல் நகம் புரியும்.... அழக்கூட நேரம் தரமாட்டான்!..... அவன் சாப்பிட்டுகிட்டிருக்கும்போது திடீர்னு கையெப்பிடிச்சு இழுக்கிறது புரியிறதுக்குள்ள தலைல நறுக்குன்னு ஆணியால குத்தின மாதிரி ஒரு கொட்டு! ''உப்பு ஜாஸ்தி'' இன்னொருநாள்.... ராத்திரி பத்து பதினோரு மணிக்கு தூக்க கலக்கத்தோட வந்து கதவெ திறப்பா ரங்கம். கழுத்தெப் பிடிச்சு ஒரு உந்து! பளார்ன்னு முதுகுல அறை! நேரம் கழிச்சு கதவெத்திறந்தா வுன்னெ! ....வெக்கக்கேடு! சாயங்காலம் திடீரென்று ரங்கத்தெப் பிடிச்சு கதவுகிட்டேயே சாச்சு ரெண்டுமூணு!! உதட்டெ துடச்சிக்கக் கூட இல்லெ - இடுப்புல குறடு போட்ட மாதிரி ஒரு பிடுங்கு! ஜன்னலெ சாத்தல்லியாம். எதிர் வீட்டு மாடியிலிருந்து எவனோ இத பாத்துட்டானாம். கண்களில் நீர் சுவர திரும்பி எப்படியே திரும்பி எதிர்வீட்டு மாடியப் பாத்தா - யாரையும் காணும். மறுபடியும் அறை! ''அஞ்ச என்னடி பார்வை!'' உறுமல் ''தேவடியா!''

கையில் குழந்தை இருந்தப்போ எத்தனை தடவை வயிற்றிலேயே உதை! வலி சுருளும் நாள் முழுதும்.

மனுஷனா அவன்?!

கால்ராயரு ஊட்டுப் பொண்ணு! ஓடியாந்துடுச்சு வாழாமெ! இந்தக் காலத்திலியும் சொல்வாளுங்க. யாரும் சொல்லக்கூடாதாம். தொண்டையெ அடச்சது. குலுங்கி அழுதாள் ரங்கம்.

இப்பக்கூட பயமில்லாமெ - வெக்கமில்லாம பின்னாலியே வந்து அடிச்சிட்டுப் போறவரைக்கும் எல்லாருந்தான் இருந்தாங்க. தடுக்கலியே!

அதென்ன இப்படி அடிக்கிறே? யாரும் கேக்கல்லியே.

எத்தனையோ தடவை சொல்லியாச்சு ''கை நீட்டினீங்க மரியாதி கெட்டுடும்''ன்னு.

இன்னும் ரெண்டு அறை கூட விழும். மானங்கெட்ட ஜென்மம். சாகணும்ன்னு தோணல்லியே!

கல்யாணம் பண்ணி மருவீடு வந்தப்ப எதிர் வீட்டு அண்ணியும் தங்கசாமியண்ணனும் வந்து பத்து நிமிஷம் பேசீட்டுப் போனாங்க. போனதும் இஞ்ச வாடீன்னு ரூமுக்குள்ள கூப்பிட்டு உதை! அவங்கிட்ட என்னடி பேச்சு உனக்குன்னு மயிரெப்பிடிச்சு ஒரு குலுக்கு!

படிச்சானாம்! படிச்சு சொல்லி வேற குடுக்கிறானாம்.

இனிமே போறதில்ல! போகச் சொன்னா இருக்கவே இருக்கு கெணறு!

ரங்கம் மூக்கைச் சிந்திப்போட்டுவிட்டு உள்ளே வந்தாள். எதிரே நிலைக்கண்ணாடி! கொஞ்சம் பெரிய கண்ணாடிதான். சிங்கப்பூர்ல இருந்து அப்பா கொண்டாந்தது. ரொம்ப பளிச்சின்னு எல்லாம் காட்டும்.

ஒவ்வொரு தடவையும் கூட்டிக்கிட்டுப் போகும்போதும் அப்பா சொல்லுவாங்க,

''இனிமே இப்படி அடிக்காதப்பா! அவளும் தாங்கமாட்டா!'' அவரு என்னா பண்ணுவாரு! அப்பால்ல!

''ம்ம்!'' - இதான் பதில். ''இந்தாம்மா! நீயுந்தான் முணுக்குன்னு இஞ்ச இஞ்ச ஓடி வந்துகிட்டே இருக்காத!''

''...அவருகிட்ட சொல்லுங்க அதெ!'' ஒரு மாதிரியா ஊருக்குப் போய்ச் சேந்த ஒடனே கால்ராயருக்கு அடுத்த நாளே லெட்டர் வரும். ''மண்டை உடஞ்சு போச்சு வந்து கூட்டிக்கிட்டுப் போங்க''ன்னு.

காத்தையனுக்கு வாயென்னமோ நீளம்தான்.

எப்போதும் கை துருதுருன்னு இருக்கும். ரங்கம் சின்னக்குட்டி! பதிமூணு வயசுல இந்தக் காலத்துல யார் கட்டிக்குடுக்குறா? சொத்து வேணும். சொந்தம் வேணும் உறவு வேணும்ன்னு காத்தையன் விடாம கேட்டதும் தூக்கி குடுத்துட்டாங்க. சமஞ்ச ஒடனே புருஷன் வந்தாச்சு புள்ளையும் பெத்தாச்சு! பிரசவ வார்ட்ல மூச்சு இழுத்துக்கிடந்தா ரங்கம். எலும்பு விரியல்லியாம். அப்பரேஷன் பண்ணனும் இனிமே தாங்காது. உயிருக்கே ஆபத்துன்னுங்க. தஞ்சாவூர் ஆஸ்பத்திரி பிரசவ வார்ட்ல இருந்து கூச்சல் போட்டுகிட்டே ஆப்பரேஷன் தியேட்டருக்கு கொண்டு போனாங்க! அப்பவே உயிரு போய் தொலஞ்சிருக்கக் கூடாது.

ஆப்பரேஷன் தியேட்டருக்குள்ள போனதுமே களுக்குன்னு பெத்துப்புட்டா குழந்தையெ! பொண்ணு கண்ணாடியில தெரியிற ரங்கம் இப்பமும் நல்லாத்தான் இருக்கான்னு ரங்கத்துக்கு தோணுது. காத்தையன் கை ரெண்டும் வாட்டசாட்டமா நீளமா இருக்கும். ஆளே கூட கொஞ்சம் உயரம். முதல் முதல் கல்யாணத்தன்னிக்கு சேத்து ரெண்டு பேரையும் நிக்கவெச்சு போட்டோ

எடுத்தப்ப ரங்கத்துக்கு வெக்கமா இருந்தது. நடுத்தரமான உயரம் அவ! அவனோட ஒட்ட முடியலை. இதுக்கு கூட வெக்கமில்லாம அடி வாங்கியிருக்கா காத்தையங்கிட்டெ! இதுக்கு ஏன் அடிக்கிறீங்கன்னு கேட்டா அதுக்கும் அடிதான்! வெளிய தெருவ அவளெ கூட்டிகிட்டு போக முடியல்லியாம்!!

ராத்திரி கட்டில்ல முதல்ல அவன் ரங்கத்தெக் கட்டிப்பிடிச்சப்போ கூட இதே பயம்தான். காலையில் எழுந்தப்போ கூட அதே பயம். இன்னும்கூட! எப்ப அடிவிழும் எப்ப கட்டிக்குவான்? தெரியாது! எப்போதுமா இதுன்னு கேட்டா! எப்போதும்தான்னு சொல்லணும்?!

மாமியார்காரி கூட முதல்ல இதைத்தான் சொல்லிக்குடுத்தாள் ரங்கத்துக்கு.

''இந்தாம்மா! பொண்ணு! எப்ப கையெ ஓங்குறதுன்னு தெரியாம எடுத்ததுக்கெல்லாம் கை நீட்டியே பழகிட்டான். நீதான் ஜாக்கிரதையா இருந்துக்கணும். கண்ணா காது தெரியாது அவனுக்கு. பேசத் தெரியாது. கையிதான் பேசும். அனுசரிச்சு போனீன்னா ஒண்ணும் பயமில்லெ''. கல்யாணம் ஆன புதுசில் அநேகமாய் விடியிற நேரம் ரங்கம் அழுதுகிட்டுத்தான் இருப்பா! மாமியாகாரி காலையிலேயே சூசகமா கேப்பா. ஒண்ணும் அடிகிடி விழல்லியே ன்னுட்டு!

ராத்திரி சினிமா கொட்டையில அடி! காலையிலேயே பேப்பரெ கொண்ணாந்து மாடியில குடுக்கல்லென்னு அடி! கீழ எறங்கி வந்து ரோட்ல - கோலம் போட்டுகிட்டு நின்னவளெ கையெப்பிடிச்சு முறுக்கி நாலுபேரு முன்னாலியே பளீர்ன்னு... தெருவே வேடிக்கெ பாத்தது!

சொந்தக்காரவங்க எல்லாருக்குமே தெரியும். ரங்கம் எஞ்சியாவுது அழுதுகிட்டு நின்னான்னா ''சங்கதிதான் தெரியுமே நீ கொஞ்சம் அனுசரிச்சு போனா என்னம்மா?''

வயசுல ரங்கம் பத்து வயசு பொண்ணாத்தான் தோணுவா. ரொம்ப பேரு கல்யாணம் பண்ண சொன்னா நம்ப மாட்டாங்க. கண்ணு ரெண்டும் பெரிசா மீன் மாதிரிப் புரளும். கொடியாட்டம் சொல்லுவாங்க அக்கம்பக்கம் எல்லாம். செல்லப்பிள்ளைதான். ரங்கம் ரங்கம்ன்னு யாரும் தூக்குவாங்க...இப்ப... நெஞ்சை அடைத்தது. அழுது கொட்டினாள் ரங்கம்!

இப்பமும் வயசு பதினாறுதான்!

எத்தினி குட்டிங்க இருபது இருபத்தஞ்சு வயசாயும் நிம்மதியா கல்யாணம் பண்ணிக்காம சந்தோஷமா... காத்தையன் சந்தோஷமே தந்ததில்லியா!

நாலுநாள் ஊருக்குப் போய் திரும்பி வந்தான்னா அவன் சந்தோஷத்தை அவா தாங்க முடியாது!

மாமியார்காரி புலம்புவா! தாங்காது ராத்திரியெல்லாம்! விடிஞ்சப்புறமும் பாட்டும் ஓயாது!...

அவன் காலேஜ்லருந்து வந்ததும் ''ஏய் மேல வாடீ!''ன்னு கிட்டே மாடிப்படி ஏறி ஓடும்போதே ரங்கம் உள்ளங்கால்லருந்து உச்சந்தலை

வரைக்கும் ஏதோ பரவி தொப்புள் கொடியில் குவிந்து மார்பில் வந்து மூச்சை உள்ளடக்கி உயிர் நிலையில் தொட்டு ஜிலீர் என்று ஜில்லிக்குமே அது என்ன? இந்த உடம்பு இப்படித் தவிச்சிருக்கா எதுக்காகவாவது?...

காப்பியுடன் மேலே போகும் போது மாமியார்காரியின் முணுமுணுப்பும் ''ஊர்ல இல்லாத பொண்டாட்டி பாத்துட்டான்!'' என்கிற வெட்டும் ரங்கத்துக்கு முதுகில உரசுமே!

மேலே போனதும் காத்தையன் அங்கும் இருக்கமாட்டான் தெரியும்! மொட்டை மாடிக்கு போகணும்!

ஹோ வென்று மொட்டை மாடி! மூன்றாம் தளம். சுவற்றோரம் நிற்பான். இடுப்பில் சிங்கப்பூர் கைலி! மேலே சட்டை இருக்காது. குட்டி பயில்வான் மாதிரி இருக்கும்! களைத்த உடம்பு வியர்வையில் மினுமினுக்கும். டென்னிஸ் விளையாடிய புழுதி கால்களில். வியர்வையுடன் அவனைப் பார்ப்பது ரங்கத்துக்கு இஷ்டம்! சொல்ல பயம்! பேசமாட்டான். பேச்சு அவனுக்கு உதவாது. தினமும் அவளுடன் பேசுவது நாலைந்து வார்த்தை தலையசைப்பு. மறுப்பு. அடி! உதை! இவ்வளவுதான்.

காப்பி குடிக்கும்போது ஆசையாய் இருக்கும். உடம்பைப் பார்த்துக் கொண்டேயிருக்கலாம். ரங்கத்துக்கு யாரும் சொல்லிக் கொடுத்ததில்லை. அவனை அவளுக்கு நன்றாய்ப் புரியும். கஷ்ட்டமே அதுதான்! பார்வையே அவளுடன் பேசும். அவன் பேச்சு எல்லாமே அவளுடன் மட்டும்தான்! இந்த நாலு வார்த்தைகூட மற்றவர்களுடன் பேசமாட்டான். அவளும் கூட பேச வேண்டும் அவளும் கூட சிரிக்க வேணும் என்றே அவனுக்குத் தோன்றாதோ? கல்யாணமான புதுசில் ரங்கத்துக்கு அவன் பேச வேண்டும் என்று ஆசை இருந்ததில்லை. காரணம் பயம். அதற்கும் கைநீட்டுவானே என்னும் உதறல்! காத்தையன் சாப்பாட்டுக்கு உட்காருவான் அப்போதான் இன்னும் அவஸ்தை. இது வேணும் என்று கேட்கக்கூட மாட்டானே. இது வேண்டாம் என்று கூடவா வாய்திறக்காது. அவன் சாப்பிடுவது ரங்கத்துக்கு ரொம்பப் பிடிக்கும். அவ்வளவு ருசித்து, நக்கி, உறிஞ்சி, மணந்து வீணாக்காமல் சாப்பிடுகிற ஜென்மம் அது! விரல்களைக் குவித்து உறிஞ்சும்போது... ரங்கத்துக்கு நெஞ்சில் ஜிர்ரென்று ஏதோ செய்யும். பாயாசம் சாப்பிடும்போது இதற்காகவே ஓடி வந்து நிற்பாள். பசுயைான வாழை இலையில் ஒவ்வொரு பதார்த்தமும் அதனதன் இடத்தில் அது அது இருக்கும் சாப்பிட்ட இலை ஓவியம் மாதிரி இருக்கும் சுத்தமாக. வழிய, ஓட, குமித்து, சிதறடித்து சாப்பிடுகிறார்களே! காத்தையன் இலையில் சாப்பிடும்போது அவளுக்காகவே அவன் விட்டுப்போகும் பழக்கமில்லைதான் என்றாலும் ரங்கத்துக்கு அதுவும் பிடிக்கும். மொட்டை மாடியில் இரவில் ரொம்ப நேரம் அவனுடன் இருந்தாக வேணும்! பனிக்காலத்திலும்கூட! வானம் நட்சத்திரங்களுடன் மேலே கவிந்து அவனும் கவிந்து அவளது பொறுமை எல்லை கடக்கும்.

''என்னங்க!''

''ம்''

''அத்தாச்சி வந்திருந்துச்சு!''

''ம்''

''பட்டுப்பொடவெ வாங்கிக் குடுத்தோம்! ரெட்ட பேட்டு; ஆகாச நீலம், மாங்கா பாடர்!''

''ம்''

''கல்பகத்துக்கு ஒரு பாவாடை வாங்கினேன். அறுபது ரூவா! அதுவும் ஜரிகைப் பாவாடைதான்!''

''ம்''

''அத்தெ திட்டுனாங்க!''

''ம்''

''மூணு வயசுகுட்டிக்கு ஏன் இவ்வளவு வெலையில பாவட வாங்குனேன்னுட்டு''

''ம்''

ரங்கத்துக்கு மூக்கு மலரும். எதுக்கும் எதிர் சொல்லமாட்டான். அவ என்ன செஞ்சாலும் சம்மதம். தப்பாவா செய்வா? அம்மாளுக்குப் பரிஞ்சுகிட்டு பொண்டாட்டியப் பேசுறதோ, பொண்டாட்டியெ ஏண்டுகிட்டு அம்மாளெ திட்றதோ செய்ய மாட்டான். எல்லாத்துக்கும் ''ம்'' தான் ஆனா...

''கல்பகத்தை வீட்டுக்கு கூட்டிக்கணும்ன்னு இருக்குங்க. மூணு வயசுலியே கான்வெண்ட் போர்டிங்ல இருக்கணுமா?''

''பளீர்!'' - அம்மா! ரங்கத்துக்கு உதடு கிழிந்த மாதிரி இருந்தது. அதுக்குமேல அவ பேசலை. உதடு நீலம் பாரித்தது. எழுந்து உட்கார்ந்து சிகரெட் ஒன்றை பற்ற வைத்துக் கொண்டான். கல்பகம் மூணு வயசாயிருக்கும்போதே கான்வெண்ட் போர்டிங்ல ரங்கம் அழ அழ கொண்டு போய்ச் சேர்த்தவனாச்சே. கல்பகம் குட்டியும் கைகாரி! பெரிய மனுஷி மாதிரி பண்ணிக்கும் வாண்டு. அழாது. அப்பனை மாதிரி பிடிவாதம். ராங்கி. போடிங்ல இருந்துக்கும். ரங்கத்துக்குத்தான் தாங்காது. நினைச்சு நினைச்சு அழுவா. அதுக்கும் அழாதேன்னு அடிப்பான் காத்தையன்.

மொட்டை மாடிதான் ரங்கத்தின் சாம்ராஜ்யம். காத்தையன் ரெண்டு வார்த்தை பேசறதும் அங்கேதான்.

''உங்கம்மா புடுங்கல் ரொம்ப ஜாஸ்த்தியாப் போச்சு. உங்களெ மாடியிலியே வெச்சு மந்துரம் ஓதேறேனாம் சொல்லுது''

''வாயபொத்துறியா இல்லியாடீ?'' - கன்னத்தில் குறடு போட்டது கை. வலி! கண்களில் கண்ணீர் ரங்கம் பதறினாள்.

''அம்மாவெச் சொன்னா பொத்துகிட்டு வருதாக்கும்!'' அறை விழும்! விழட்டும் விழட்டுமே!

அறைவிழவில்லை. அப்படியே ஆட்டுக்குட்டியைத் தூக்குவதுபோல் தூக்கிக் கொண்டு போய் கொசுவலையைத் தள்ளி விலக்கி உள்ளே தள்ளி இருட்டு மெத்தையில் புதைத்து...

பூரணமான இருள். வலிமையான இருள். ரங்கத்துச் சின்ன உடலில் இத்தனை வலிமையும் இருப்பதை அவனுக்கே புரிய வைக்கும் இருள். இருளுக்குள்ளே காத்தையனை இத்தனை மிருதுவாக இத்தனை ஆழத்தில் புரியவைக்கும் புயலான இருள்! ஆ! அவனுக்குள் ரங்கம் புதைந்து வியர்வையில் நனைந்துபோனாள். தனியே அவளைக் காணோம்.

காத்தையனுக்குப் பேசத் தெரியாது. இந்த இருளின் மௌனம் உடம்புக்குள்ளே எத்தனை பேசுகிறது!!

விடியல் இருளிலும் வியர்வை ஊறிக் கொண்டிருந்தது.

கண்கள் சொருகி மயக்கத்தில் உடல் இயங்கிக் கொண்டிருந்தது.

கூந்தல் அவிழ்ந்து கட்டிலின் மேல் கட்டை வழியே வழிந்திருந்தது. ரங்கத்துக்கு கொஞ்சம் கூந்தல் அதிகம்தான்.

தனியே கண்ணாடியில் பார்த்து அவளே பயப்படும் இடை இந்தப் புயலில் எத்தனை வளைகிறது?!

காத்தையனின் பிணைப்பில் இந்த விடியல் இன்னும் கொஞ்ச நாழிகைதான். ஜன்னல் வழியே வெயில் இன்னும் கொஞ்ச நேரத்தில் தொட்டுப் பார்க்கும். இன்னும் எத்தனை நேரம்... காலை நேரம். அயர்ந்து கிடந்தாள் ரங்கம். கண்கள் வழியே சூடு இறங்கிக்கொண்டிருக்கிற விடியல். யாரோ எட்டி உதைக்கிற வலி. கனவில் யாரோ முகம் தெரியவில்லை. மிக மிருதுவாய் ரங்கத்தைத் தூக்கி... மறுபடியும் எட்டி உதைக்கிறார்கள். கண்களைப் பிட்டுக் கொண்டு பார்க்கிறாள் ரங்கம்.

அந்தச் சிம்மாசனத்து மெத்தையிலிருந்து ரங்கம் உருண்டு விழுவது புரிகிறது. இரவு முழுதும் பஞ்சணையில் அவனது புஜங்களில் ஏறி மார்பில் நடனமிட்ட அவள் ராஜ்யத்தை உதைத்துத் தள்ளியது யார்? பதறி எழுகிறாள்.

''ஏய்! ஏந்திரிடி!'' - அவள் தொடையில் சுரீரென்று வலி! என்ன செய்கிறான்?

''ஏன் இப்டி ஒதக்கிறீங்களாம்? எழுப்பினா ஏந்திரிக்க மாட்டேனா?''- தூக்கி நிறுத்தினான் காத்தையன். கையில் ஷவரத்து ரேஸர் - பாதி மழித்த கன்னம் - மறுபாதி வெள்ளை நுரை - ஆண் வாசனை!

ரங்கம் அவனுக்கு எப்போதும் பள்ளிக்கூடத்துப் பெண்தான். சமமில்லை! சொல்லப்போனால்...

ஓட வேண்டும் ஓடியார வேண்டும் ஏவலுக்கு நிற்க வேணும். இல்லாவிட்டால் அடி!

எதிர்த்துப்பேசினாலும் - பேசாவிட்டாலும் - ஊமையாய் நின்றாலும் அடிவிழுவது மட்டும் சகஜம். கல்யாணமாகி வந்த புதிசில் அடிவிழ விழ அழுது அழுது ஊமையாகிப்போவாள். இன்னும் மௌனமே மீதி! உடம்பு முழுவதும் அங்கங்கே திட்டுத்திட்டாக வீக்கம் தடிப்பு நீலம்பாரிப்பு காயங்கள் இருக்கும்.

வயிற்றில் எட்டாவது மாசம் - கல்பகம் வயிற்றில் துள்ளுகிற சுகம் தோன்றிய வேளை.

மதியம்! அண்ணன் வீட்டிலிருந்து சித்திரான்னம் வரிசை கொண்டு வந்திருந்தார்கள்.

எவர்ஸில்வர் டிபன் காரியரில் பத்து வகை சாதம், பழம் பாக்குப் பூ தேங்காய் கல்கண்டு பணம்.

காத்தையன் வரவில்லை. வரமாட்டானா என்றிருந்தது ரங்கத்துக்கு. யாருகிட்டெ செல்ல முடியும்?

அம்மா வரவில்லை. வந்திருந்தாலும் பயப்படுவாள் காத்தையங்கிட்டெ!

பூ வைத்துப் பின்னி அலங்காரம் செய்து போட்டோ எடுத்தார்கள். அவன் வரவில்லை.

ஜடைபில்லை வைத்து சுட்டிகட்டி இழைஇழையாய் தங்க ஜாலர் வைத்து பட்டுப் புடவை கட்டினார்கள். கண்ணாடி காட்டினார்கள்! அவனைக் காணோம். காத்தையன் வரலை.

ஹாலில் கால் நீட்டிப் போட்டு ஒக்காத்திருந்தா மாமியார்காரி!

ரங்கம் புடவை அவிழ்க்காமல் பூ பிரியாமல் நகை கழட்டாமல் அவனுக்காய் காத்திருந்தாள். ஒம்பது மணி நாற்பத்தைந்து நிமிடத்துக்கு பூட்ஸ் சப்தம் கேட்டது. நடை லைட் மட்டும் போட்டிருந்தது. ஹாலில் இருந்த குத்துவிளக்குப் பக்கம்தான் நின்றாள் ரங்கம்.

''மேலவாடி!'' - படியேறி வழக்கம்போல் மேலே போனான் காத்தையன்.

ஆத்திரம் தாங்கவில்லை. உடம்பு பதறியது கோபத்தில் ரங்கத்துக்கு. மேலே போனாள் ரங்கம்.

''காப்பி எங்கே?'' எத்தனை நேரம் கழித்து வந்தாலும் காத்தையனுக்கு காப்பி மட்டும் வேண்டும். சாப்பாடு அப்புறம் கொஞ்ச நேரம் கழித்துத்தான். ரங்கம் பொருமினாள். தாங்க முடியவில்லை. பேசக் கூட முடியாத மனுஷன்! சீ! ஏதாவது சொன்னா கைமட்டும் நீளும்.

''என்ன கேக்றேன்ல்ல?!''

''....'' ரங்கத்துக்கு வினோதமான ஆனந்தம். பேசணுமாமே!... வாயெத் தெறந்து... அட!... பனியனை அவிழ்த்துப் போட்டான். பனியன் பட்டைகள் அப்படியே அவன் உடம்பில் பதிந்திருந்தது. வியர்வை ஊறிக்கிடந்தது. மினுமினுத்தது மின் ஒளியில். ஒரு இடத்திலும் கொழுப்பு இல்லாத அளவான உடல். இத்தனை அழகும் அளவான வலிவும் - மிருகத்தனமான பலமும் - தன்னுடையது அல்ல என்ற உணர்வு ஏன் பயப்படுத்துகிறது ரங்கத்தை? பூசியது போன்ற அவள் உடலை அவன் பிடித்து இழுத்து முகத்தைத் திருப்பி... எத்தனை சுலபமாய் சுதந்திரமாய் அவளைக் கையாளுகிறான்! அணைத்து....ம்... கொஞ்சநேரம் நிலை மறைந்தபின்... ரங்கமும் அடங்கி ஆறிப்போகிறாள். அவன் மேல் அவள் வியர்வை மணம்.

''அண்ணன்லாம் வந்திருந்திச்சி!''

''ம்''

''எல்லாரும் உங்களையே கேட்டாங்க! போட்டோகூட எடுத்தாங்க''

''ம்''

''எட்டு மணி வரைக்கும் காத்திருந்தாங்க.''

''ம்''

''அப்பாகூட கேட்டாங்க. என்ன இண்ணைக்கி கூடவா வரப்படாதுன்னுட்டு!''

''ம்''

''இதே தொல்லையாப் போச்சி! வாயத் தொறந்துதாம் பேசுங்களேன்! ஏன் வரல்லியாம் நீங்க?''

''...'' முறைத்தான் காத்தையன். கண்களில் செவ்வரி படர்ந்திருந்தது. தெரியும்! வாசனையும்! வீக்கமும்.

''குடிச்சீங்களா?''

''-'' - ஏளனமாய்ப் பார்த்தான் அவளை. என்னடி புதுசாங்கிற மாதிரி சிரித்தான்.

''குடிக்கக்கூடாதுன்னு எத்தினி தடவை சொல்லியிருக்கேன்?''

அவள் பேச்சு எடுபட்டதில்லை. வாயில் ஏதோ மென்று கொண்டிருந்தான். சிகரெட்டை புகையவிட்டான்.

''இண்ணைக்குக் கூட நேரத்தோட வரப்பாதா?''

''...'' ''அப்பா கூடச் சொன்னாங்க. எனக்கென்னன்னு போம்மான்னுட்டு. எனக்குத்தான் மனசு கேக்கல்லெ! துப்பு கெட்ட செறுக்கியாத்தான் ஆயிப்போனேன். எதுக்கு உங்களுக்கெல்லாம் கல்யாணம்ங்கிறேன்? புளுக்கெ வேலை பண்ணறதுக்கா!? தேவுடியாளா நான்?'' ''ஆ!''

பிடறி இற்று விழுந்துவிடும் போலிருந்தது ரங்கத்துக்கு எட்டி வயிற்றில் ஒரு உதை!

கண்கள் இருண்டு வந்தது. கனவிலே அவளைத் தூக்கி பஞ்சணையிலே உட்கார வைத்து...

மறுபடியும் எட்டி ஒரு உதை. மயிரை லாவி சுவற்றில் ஒரு மோது! நெற்றி விண்ணென்றது. வைத்த அந்த இளமை யாருடையது?... முகம் தெரியாது தவித்தாள் ரங்கம் ம்ஹும்... அது இவனில்லை! - அறை வாயில் விழுந்தது இப்போது. புரண்டு விழுந்தாள் ரங்கம். மொத்து மொத்தென்று முதுகிலும் விழுந்தது. ''ஏய் ஏய் விட்ரு! விட்ரு! பாவீ! வயத்துப் புள்ளக்காரீடா! பாவீ! உட்டுர்றா உட்டுர்றா!'' கீழேயிருந்து அம்மாகாரி மேலே ஓடி வந்து கொண்டே உலுப்பினாள் மகனை.

''பேசுவியா இனிமே?'' - ரங்கம் கைகள் முறுக்கிப் பிடிக்கப்பட்டிருந்தது. பூமியில் கிடந்தாள் அவள். உறுமிக் கொண்டிருந்தான் காத்தையன். அம்மாகாரி ஓடி வந்து விலக்கினாள் - ''விட்ருன்னா விடுடா''

''நீ போம்மா பேசாமெ! அவளெ இன்னைக்கி ரெண்டுல ஒண்ணு...!''

''போடா போக்கத்த பயலெ! உட்றா... செத்துகித்து தொலையப்போறா... எந்தலையில்ல உருளும்?''

''நீ கீழ போ!''

''வயித்துப் புள்ளைகாரிடா! பாவீ! கையெ வெக்யாத! சொல்லிப்புட்டேன் ஆம்மா!''

''பணம் வருது பணம் வருதுன்னு கட்டிவெச்செ பொட்டெ செருக்கி! என்னா பேச்சு!? வாயில்ல நீளுது!?

''ஆம்பளையான்னு கேக்குறா! தேவுடியா!''

.... சிம்மாசனத்திலிருந்து கீழே கீழே அதல பாதாளத்துக்குள் விழுந்து கொண்டிருக்கிறாள் ரங்கம். முகந்தெரியாத அந்த இளவரசன் கையணைப்பு மறைந்து மென்மை மறந்து விழுந்த பாதாளத்தில் அவளை அங்கம் அங்கமாய் கழட்டுகிறான் ஒரு முரடன். கைகள் நெறிய மார்பு இறுக கால்கள் மடங்க ரங்கத்தை வரிந்து கட்டுகிறான். அவன் முகம் நன்றாகப் புரிகிறது...

அடிவயிற்றில் வலி வெட்டிவாங்குகிறது... அம்மா!

...அம்மாவாடீ நீ! என் கழுத்தில் பத்து வடம் சங்கிலி போட்டு இறுக்கி கால் இரண்டிலும் கொலுசு சுற்றி... சூளாகர்தோடு! ரெண்டுடபென் வளைல்! கோதுமை வடச் சங்கிலி! திருகுப்பூ தாம்பு முறுக்குச் சங்கிலி. வங்கி கடசீயில தாலியில சுருக்கு மாட்டி இவன் கிட்ட விட்டியே! ரொக்கமும் நகையும் நிலமுமா எழுபத்தி ஓராயிரம் சொத்தோட சொந்தம்!... இதோ இவனும்...

....வரிந்துகட்டியவன் இப்போது அவள் கூந்தலைப் பற்றி இழுத்துக் கொண்டு எங்கே போகிறான்!

அடிவயிறு கதறித் துடிக்கிறது! வலி. படல் படலாய் வயிற்றுக்குள் திரைவிலகுவதுபோல் கிழிகிறது.

முகந்தெரியாத இளவரசன் எங்கே?... முகந்தெரிந்த இவன்தான் அவளை மலைக்குகைக்குள் கொண்டு போகிறான். குகைக்குள்ளே ஒரு பெரிய பாறை உள்ளே போனதும் பெருஞ்சத்தத்தோடு மோதி வாயிலை மூடிக் கொள்கிறது.

''அம்மா!'' அலறினாள் ரங்கம்.

''தூக்குடா! தூக்கு சீக்கிரம் டாக்டர் ஊட்டுக்குக் கொண்டு போகணும்.''

தஞ்சாவூர் மெடிகலுக்கு டாக்ஸியில் ஆயிரம் குலுங்கலோடு கொண்டு வந்து சேர்த்தபோது மணி ராத்திரி மூணு மதியம் மூணுமணி வரைக்கும் மயக்கம். ஆப்ரேஷன் பண்ண கொண்டுபோகும்போது மறுபடியும் வலி எடுத்து ரங்கம் - கல்பகத்தை குறைமாசப் பிள்ளையாய் பெற்றெடுத்தாளே!

பிள்ளை பிழைக்காது என்றார்கள். சங்கு மாதிரி வெளேரென்று அசையாமல் கிடந்தாள் குழந்தை. மூர்ச்சை தெளிந்தபோது ரங்கம் அழ ஆரம்பித்தாள். எல்லாரும் அமட்டினார்கள்! அழக்கூடாதாம்.

தஞ்சாவூர் ஆஸ்பத்திரி புரிந்தது. சுற்றிலும் எல்லாரும்... அம்மாகூட! ''தப்பிச்சுகிட்டே'' என்று சிரித்தாள் டாக்டரம்மா! கண்ணை மூடிக் கொண்டாள். நெஞ்சு பாரமாய் இருந்தது.

கண்ணை மூடியதும் நீலநிறம் படர்ந்தது கண்ணுக்குள்ளே...

...மிருதுவான கண்ணீர்த் துளிகள் அவள் மீது உதிர்ந்தன. நிமிர்ந்து பார்த்தாள் ரங்கம். கண்கள் இரண்டு கண்ணீர் ஊற கைகள் இரண்டு கைகளுடன் அவளைத் தழுவிக் கொள்கின்றன. கனவுபோன்ற உதடுகள் இரண்டு அவளது உதடுகளில் மலர் இதழ்களென உதிர்ந்து அழுந்தின. மார்புக்குவடுகளிலும் படிந்த அந்த வன்மை பொருந்திய இளைஞனது மார்புகளில் தோய்ந்துபோன மென்மைதான் அவள்! மென்மை அனலோடு அடர்ந்த அந்த அவனை அவள் பார்க்க வேணுமே! முடியவில்லை! எப்படி முடியும் அவளில் பதிந்து கிடக்கிற அவனைத் தூரப் பிரித்து நிறுத்தும் வரை அவனை எப்படிப் பார்க்க... அம்மாடீ! எத்தனை பெரிய கண்கள் அவனுக்கு. இவனை ரங்கத்துக்கு நன்றாய்ப் புரியும். ஆனால் அவன் யார்?...

கல்பகம் அலற ஆரம்பித்துவிட்டது! பிறக்கு முன்னே அதுவும் காத்தையன் வைத்த பெயர்!

'அம்மா! என்னை இவனுக்கு கொடு என்று நான் கேட்டேனாடீ! தாயே!'

இளவரசன் ஓடி வந்து அவள் கால்களில் உட்கார்ந்து சிரித்தான்! கல்பகத்தின் அலறல்! யாரோ தூக்கி அவள் மார்பின் அருகே வைத்து லேசாக உதடுகளை...

குடம் சரிந்தது. பாலருவி கொட்ட கல்பகம் அதில் ஒட்டிக் கொண்டு நீந்த மார்பு நைந்தது. கல்பகத்தை ஏந்தி வந்த இளவரசனை அவள் பார்க்க முனையவில்லை. கல்பகம்தான் சிரித்தாள். மிகச் சிறிய குழந்தை. பூரண வளர்ச்சியில்லை. ஆயினும் பாலை உறிஞ்சியது. நெஞ்சில் பரவிய சூடு தணியவேயில்லை ரங்கத்துக்கு. தலையில் சுருளாய் முடி கனவு போல் கலைந்திருக்க இளவரசன் அவள் கால்களிலிருந்த சிக்கலை அறுத்தது போலிருந்தது. கைகளைத் தூக்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டபோது ரங்கத்துக்கு நெஞ்சு விம்மியது.

வீட்டுக்கு கொண்டு வந்து தாயும் குழந்தையுமான பின்னரே காத்தையன் வந்து பார்த்தான். பத்து நாள் பேசா விரதம் எடுத்தாள் ரங்கம். பூப்போலச் சிரித்த கல்பகம் போதும், இனி!

காத்தையன் தினமும் கிட்டே வந்து ரெண்டு நிமிஷம் பாத்துவிட்டுப் போவான்.

குழந்தைமீது காத்தையன் குனிந்து முத்தமிடும்போது குளிர்ந்து போவாள் ரங்கம். தானே எச்சிலிட்டு முத்தமிடுகிறதுபோல் மனசும் கும்மளியிடும். அடுத்து அவளிடம் வந்து குனியத் தோணாதா?

ஹார்லிக்ஸ் பாட்டில்கள்! வின் கார்னிஸ் பாட்டில்கள். கொஞ்சமாய் வலி தெரியாமல் இருக்க ப்ராண்டி. பழங்கள் அவள் எப்போதும் விரும்புகிற பத்திரிகைகள் புஸ்தகப்படங்கள்!

ரங்கத்துக்கு கண்களில் நீர் தேங்கும். காத்தையன் தானா இது?

கல்பகம் தேறி குழந்தையாய் கொழுகொழுவென்று ஆனதும் அப்பா பெண்ணாகிப் போனதும் ரங்கத்துக்கு ஆச்சரியம்! காத்தையனிடம் அடி வாங்குவதற்கு கல்பகமும் சளைக்கவில்லை.

''புள்ளைகிட்டபோயி இப்டி கை நீட்றியே... நீட்ன கையெ ஒடிச்சா?'' அம்மாகாரி குரல் இது!

இரண்டாம் வாரத்திலேயே தெளிந்து எழுந்தாள் ரங்கம்.

உடம்பு பூரணமாய் குணமாகவில்லை. தலைக்கு மூன்றாம் தண்ணி விட்டிருக்கிறது.

களைப்பாலேயே வரும் அழகும் வியாதியாலேயே வரும் தெளிவும் உடம்பு தேறுவதாலேயே ஊறும் புது ரத்தத்தின் அழகும் ரங்கத்தின் உடம்பு பசும் பொன்னாகிவிட்டிருந்தது. பொன்னுடன் பூரிப்பும் எழுந்து ஓடத் தூண்டியது!

''யாரது?'' - வாசலில் யாரோ நிழல் தட்டியது.

வாசலில் யாருமில்லை. காத்தையன் வரவில்லை. மாலைநேரம். கண் மயங்கும் வேளை.

''நாந்தாண்டீ!'' என்று வாசல் பக்கமிருந்து பழகிய குரல். இனிமை. பெண் குரலும்.

''யாருன்னேன்?'' - மெதுவாய் ஹாலுக்கு நடந்து வந்தாள் ரங்கம்.

''அம்மிணி! வழி தெரிஞ்சுதா உனக்கும்! டேயப்பா எப்டியிருக்கே?''

''அது கிடக்கு! நீ எப்டியிருக்கே உடம்பெல்லாம் தேவலை போலருக்கே. எங்கடி உங்காளு?!''

அம்மிணி ரங்கத்து க்ளாஸ்மேட்! ஒண்ணாப் படிச்சு பாதியிலேயே ரங்கம் வந்தாச்சு. அம்மிணி நிறைய படிச்சு ஒரு எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸரா மெட்ராஸ்ல இருக்கா. புருஷன் லேலண்ட்ல ஒரு ஆபீஸர். எப்பாவது பாக்க வர்ற சினேகிதி. ஒரு மாசமாகும்மானதல கேம்ப்! வரும்போதெல்லாம் ரெண்டு பேரும் ஒண்ணுதான்!

''உன் வீட்டுக்காரர் எப்டி இருக்கார்?'' - என்கிறாள் ரங்கம்.

''எல்லா ஆம்பளையும் மாதிரிதான்!''

''என்னடீ இது நீயும் சலிச்சுக்கிறியே!''

''மனசு ஒத்துக்கிற எடத்ல உடம்பு ஒத்துக்காது. உடம்பு ஒத்துப்போகும்போது எங்களுக்கு எங்களையே ஒத்துக்காது''

''புரியல்லியேடீ! நீ இந்த காப்பிய சாப்பிடு! அத்தைதான் போட்டாங்க!''

''புரிய என்ன இருக்கு! அவருக்கு என்னெப் பிடிக்கலை''

''யாருக்கு யாரெத்தான் பிடிக்கிதுங்கிற? உட்டுட்டு ஓட முடியுமா?''

''ஏன் உன் ஹஸ்பெண்டுக்கு என்னடி? ஜம்ன்னு எப்போதும் ட்ரிம்மா... ஜென்டில்மேன்ல்லியா?''

''உங்கிட்ட ரொம்ப ஒழுங்கதாண்டி! இல்லேங்கல்லே நான்''

''வேற என்ன... ஏதாவது...

பயந்து சுற்றிலும் பார்த்தாள் ரங்கம்.

''என்ன! ஏங்கிட்ட... சொல்ல... யாரானும் தடுக்கிறாளா...!?''

அழுகை முட்டி வந்தது. மூச்சு இடறியது. யாருமில்லை. அம்மிணியிடம் சொல்லி... அடக்க முடியாமல் அழுதாள்.

''அம்மிணீ! பணத்துக்கு வாங்கியிருக்காங்க என்னெ! சொத்துக்குத்தான் நான். எனக்கு பதிலா பணம்தான் இஞ்ச இருக்கு! எழுபத்தஞ்சு பவுன்! நிலம் நீச்சு பத்து வேலி எல்லாம் கைமாறியிருக்கு!''

''ச்சீ! என்னடி சொல்றே!''

''வந்து எனக்கே மிந்தி புரியலை! அப்பமும் புரிஞ்சுதான் சொல்றேனோ என்னமோ. எங்க வீட்ல நான் மனுஷியா இருந்தேன். இப்ப புள்ளெ பெத்தும்கூட எனக்கு பொண்ணும் மாதிரியே தோணுது-''

கண்ரெண்டும் ததும்பின ரங்கத்துக்கு. யாருகிட்டேயும் சொல்லமுடியாது சொல்லியாச்சு!

ராத்திரியில யாரோ என் கைகாலையெல்லாம் வரிஞ்சு கட்டிட்டு என்னெ மடக்கிப் போட்டு பிழியறான்.... ''என்ன இது உளறல்!''

அம்மிணி அது யாருமல்லெடீ! ஜெண்ட்டில்மான்னியே. அந்த ஆளுதான்

''என்னடீ ஆச்சு உனக்கு?''

''ஏண்டி உன்னையே நீ ஏமாத்திக்கிறே! நீ படிச்சுட்டு ஏமாற்றிருக்கே எங்கப்பன் ஆத்தா என்னெ சொத்துக்கு வித்திருக்காங்க! எனக்கு பொண்ணுன்னு ஞாபகம் வர முன்னாடியே சொந்தம் வேணும் சொத்துசேரணும் பிரிஞ்சா நிலம் போய்டும்ன்னு என்னெ நானே வித்துக்கிட்டாச்சு. உன்னெ படிக்க வெச்சாங்க. ரொம்ப நல்லாப் படிச்சே. ஒஸ்த்தி மாப்ளெ பாத்து படிக்க வெச்சதுக்கும் சேத்து விலை குடுத்துட்டாங்க! நீ மாத்ரம் சும்மா போனே அவன் கிட்டெ! இருபத்தையாயிரம் ரூபாயாச்சே உன் வீட்டுக்காரன்!''

''அசிங்கமா பேசாதே! ஓ! ஹிஸ்டீரியாவா இருக்குமோ!?'' அம்மிணி. ஹெஹ் ஹெஹ்.

அதே நேரத்தில் உள்ளே நுழைந்தான் காத்தையன் -

''வாங்க'' என்றாள் அம்மிணி உடனே!

''உங்க ஹஸ்பண்ட் நல்லாயிருக்காரா? '' என்று கேட்டபடியே மாடி ஏறினான் காத்தையன்.

''ஏண்டி ரங்கம்! உங்காளு வந்துட்டார் நான் இனிமே எதுக்கு? வரட்டுமா?''

''உங்காளுங்கிறியே! அப்ப ஏன் இஞ்ச வந்துட்டே. உங்காளுகிட்ட இல்லாமெ?''

''இப்ப நீ என்ன செய்யணும்ங்கிறே! எங்காத்துக்காரர் கூப்பிட்டா நான் போகத் தயார்தான்!''

''அப்ப நீ வாழாவெட்டி!''

அம்மிணி பதில் சொல்லமுடியவில்லை. ரங்கம் இப்பா மாறிப்போயிருக்கிறாளே இது நிஜமா?!

மாடிப்படியிலிருந்து குரல் - '' ஏய் கொஞ்சம் மேல வந்துட்டுப்போ!''

''பாத்தியா! இப்ப நான் மேல போகணும் பூசைவாங்க! இதான் இஞ்ச நீ சொன்ன ட்ரீம் ஜெண்டில்மன் தர்றது! வந்துடுவியா! போகட்டுமா?'' என்றாள் அம்மிணி. அவளுக்கு அவள் சரி! ரங்கத்துக்கு ரங்கம் சரியில்லையே!

மேலே போனாள் ரங்கம். தயாராய் நின்றான் அவன்.

''அவகிட்ட என்னடி உனக்கு பேச்சு?''- பளீர்!

''ஏன் பேசினா என்ன?''

''சத்தம் வரக்கூடாது வெளிய! ஆமா!'' அறைந்தான் மறுபடியும். ம்! வாயத் தெறக்காதெ!

''அவ புருஷன் வந்திருந்தானா? அவ மட்டும்தான் வந்தாளா?''

''ஏன் அவ புருஷன் வந்துட்டுத்தான் போறாரு!''

''எதுத்தா பேசுற!! எதுத்தா பேசுற!'' வாயிலேயே அடித்தான். பளிச்பளிச் சென்று சப்தம் கீழே கேட்டது.

அம்மிணி எழுந்து நின்றாள் - மேலே என்ன நடக்கிறது! ரங்கம் சொல்வதும் நிஜம். ஏதோ பயங்கரம். எல்லாருக்கும் தெரியுமா இது? புரியாது கூட! அம்மிணியும் இருபத்தையாயிரம் ரூபாய் கொடுத்ததும் நிஜம். படித்து சம்பாதித்தும் இன்னும் அங்கே தேவையும் அதுதான்! இன்னும் பத்தாயிரம் வேணுமாம். இந்தக் காலத்தில் அதை வெளியே சொல்கிறதில்லை. அசிங்கமாம். பணம் கொடுக்கப் போகிறதில்லை. எதிர்த்தாயிற்று. அதை ரங்கம் புரிந்து கொண்டாள்! ரங்கம் இத்தனை சுமந்து...என்ன பயன்....

''யாருடியம்மா நீயி! நம்ப வக்கீலய்யர் பொண்ணு மாதுரில்ல இருக்கு?''

''ஆமா மாமி! நானு அம்மிணிதான்!''

''அம்முணியா! இம்முணியூண்டு இருந்தே! நெடுநெடுன்னு வளந்துட்டியே புருஷன்காரன் நல்லாருக்காரா''

மாடியிலிருந்து தலை கலைந்த நிலையில் ரங்கம் கீழிறங்கி வந்தாள். இதே நேரத்தில் அம்மணி வெளியேறிக் கொண்டிருந்தாள். சொல்லிகிட்டுப் போகலை; ரங்கமும் ஏன்னு கேட்கலை.

(வெளி வராதது)

